முன்னொரு கற்பத்திற் சாகத்தீவை யாண்ட பிரபா
கர ராசனுடைய மனைவியிடம் ஒரு கருப்பத்தி லிரண்டு
பிள்ளைகளும் மற்றிரண்டு கருப்பங்களி லிரண்டு பிள்ளை
களுமாகப் பிறந்த சூரன், பதுமன், சிங்கன், தாரகன்
என்னு நால்வர்களுட் சூரனும் பதுமனும் அகத்திய
மாமுனிவர் போதகப்படி சன்மய சண்முகக் கடவுளின்
மயூரவாகனமாகவுங் குக்குடத்துவசமாகவுந் தாங்கள்
சேரவேண்டுமெனவும், சிங்கனுந் தாரகனுந் திரணபிந்து
முனிவர் விருடபயோகி முனிவர் போதகங்களின்படி
காளியின் சிங்கவாகனமாகவும் மகாசாத்தாவின் யானை
வாகனமாகவுஞ் சேரவேண்டுமெனவுங் கருதிப் பூமி புரத்
தலைப் புத்திரர்பால் நல்கிவிட்டுப் பஞ்சாக்கினி மத்தியி
னின்று நாற்பதினாயிரம்வருடந் தவம் பயின்றனர். அவ்
வமையம் பரமசிவ தரிசனத்திற்காகக் கைலைக்கு வந்
திருந்த சண்முகக்கடவுள் அரி அயன் மகாசாத்தா காளி
முதலியோர் வாகனங்களுட் கருடன் அன்னம் முதலிய
வாகனங்கள், "மயில் சேவல் சிங்கம் யானை யென்பவை
களைக் கண்ணுறீ இச் சூரனாதியோர் தவஞ்செய்யுங் கருத்
தைத் தெரிவித்தவுடன் அம்மயிலுஞ் சேவலும் யானையுஞ்
சிங்கமும் அவர்களின் தவநிலையைக் கெடுத்து, "நீவிர்
எங்கள் பதவிகளை யிச்சித்தமையால் எங்கண் முகங்க
ளுடைய பூதங்களாகக் கடவீர்" என்று சபித்தன. அவ்
வணம் பூதங்களாகிய நால்வரும் கைலையிற் றங்கியிருந்த
மயில்முதலிய நான்கனையுங்கண்டு வந்தித்து, "அடியேங்
கள் கருத்து முற்றுப்பெறுங்கொலோ?" என்றறிந்து
கேட்டலும் அவைகள் மனமிரங்கி, "நீயிர் இக்கைலைக்
கணங்களுடன் சின்னாளிருப்பீரேற் சத்தியமாக முற்றுப்
பெறும்" என இயம்பின. அவ்வாறு நால்வரும் அண்டா
வரண பூதங்களோ டிருக்குங்கால் யுத்தத்தில் அசுரருக்
கிளைத்தோடிய உம்பருக்குச் சகாயமாக அந்நால்வரும்